## ॥ २. संकीर्णवर्गः ॥

### 2. ஸங்கீர்ண வர்கம்

முன்னிரண்டு காண்டங்களிலும் வகைப்படுத்தப் பட்ட ரீதியில் ஸ்த்ரீ, புருஷர்களையும், வஸ்த்துக் களையும் பற்றி ஒவ்வொரு சொல்லின் மாற்றுச் சொற்களை வரிசைப்படுத்திச் சொல்லப்பட்டன. மூன்றாவது காண்டமான இந்தக் காண்டத்தில், அந்த அந்த வஸ்த்துக்கள் ஸ்த்ரீ, புருஷர்களுக்கு அடைமொழி களாக வரக்கூடிய விசேஷ்நிக்ந சொற்கள் தொகுத்துக் கூறப்பட்டது.

இந்த ஸங்கீர்ண வர்க்கத்தில் மேலே சொன்னவாறு வகைப்படுத்த முடியாத சொற்கள் தொகுத்துக் கொடுக்கப்படுகின்றன.

நாமலிங்கானுஸாஸநம் என்ற பெயருக்கு ஏற்ப இந்தச் சொற்களில் லிங்கத்தை அந்தச் சொல்லின் விகுதியின் தன்மையைப் பொருத்து, லிங்க மாறுபாடுகளைத் தெரிந்து கொள்ளவேண்டும்.

प्रकृतिप्रत्ययार्थाद्यैः संकीर्णे लिङ्गमुन्नयेत् ।

कर्मक्रिया ..................

1. कर्म (न), 2. क्रिया (स्त्री)

**1. கர்ம (ந-அ)** செயல் - புல்லிங்கத்தில் कर्म என்ற இச்சொல் அபூர்வமாக வருகிறது. அதற்கு இலக்கண அனுமதி கிடையாது

**2. க்ரியா (பெ-ஆ)** செயல்

....................तत्सातत्ये गम्ये स्युरपरस्पराः ॥ 1159

1. अपरस्परः ( (पुं/स्त्री/न)

**1. அபரஸ்பர:** (பு-அ) ஒன்றுக்கொன்று ஓய்வாத
அபரஸ்பரா (பெ-ஆ) செயல்களில் ஓயாது ஈடுபட்டவர்
அபரஸ்பரம் (ந-அ)

**साकल्यासङ्गवचने पारायणपरायणे ।**

1. पारायणं (न), 2. परायणं (पुं/स्त्री/न)

**1. பாராயணம்** (ந-அ) ஒரு நூலைத் தொடர்ந்து படிப்பது
**2. பராயண:** (பு-அ) ஒரு நற்பணியில் முழுமூச்சாக
**பராயணா** (பெ-ஆ) தொடர்ந்து ஈடுபட்டவர்
**பராயணம்** (ந-அ)

**துராயண:** तुरायणம் என்ற பாடத்தில் அவசரமாகப் போகின்றவர் என்று பொருள்

**यदृच्छा स्वैरिता ...................**

1. यदृच्छा (स्त्री), 2. स्वैरिता (स्त्री)

**1. யத்ருச்சா** (பெ-ஆ) எதிர்பாராமல் நேர்வது
**2. ஸ்வைரிதா** (பெ-ஆ) தான் தோன்றித்தனம்

**..................हेतुशून्या त्वास्था विलक्षणम् ॥ 1160**

1. विलक्षणं (न)

**1. விலக்ஷணம்** (ந-அ) காரணமில்லாத ஈடுபாடு
விதிமுறைக்கு அகப்படாதது

**शमथस्तु शमः शान्ति ............**

1. शमथः (पुं), 2. शमः (पुं), 3. शान्तिः (स्त्री)

*1. சமத: (பு-அ)* மன அடக்கம்
*2. சம: (பு-அ)* ,,
*3. சாந்தி: (பெ-இ)* மன அமைதி

**..................दान्तिस्तु दमथो दमः ।**

1. दान्तिः (स्त्री), 2. दमथः (पुं), 3. दमः (पुं)

*1. தாந்தி: (பெ-இ)* புலனடக்கம்
*2. தமத: (பு-அ)* ,,
*3. தம: (பு-அ)* ,,

**अपादानं कर्मवृत्तं ................ ।**

1. अपादानं (न)

*1. அபாதாநம் (ந-அ)* நடந்த செயலுக்கு ஏற்பட்ட புகழ்

**....................काम्यदानं प्रवारणम् ॥ 1161**

1. प्रवारणम् (न)

*1. ப்ரவாரணம் (ந-அ)* தான் விரும்பிய பயனைப் பெற - கோரியவனுக்குக் கோரியதை அளிப்பது -இஷ்டம்போல பொருள் வழங்குவது

**वशक्रिया संवननं ............**

1. संवननं (न)

*1. ஸம்வநநம் (ந-அ)* மணி, மந்த்ர, மருந்துகளால் வசப்படுத்துதல்

**......................मूलकर्म तु कार्मणम् ।**

1. मूलकर्म (न), 2. कार्मणम् (न)

1. மூலகர்ம (ந-அ) மூலிகைகளாலும், மந்திரங்களாலும் அகற்றப்படும் ஏவல்
2. கார்மணம் (ந-அ) ,,

विधूननं विधुवनं ................

1. विधूननं (न), 2. विधुवनं (न)

1. விதூநநம் (ந-அ) உதருதல்
2. விதுவநம் (ந-அ) ,,

........................तर्पणं प्रीणनावनम् ॥ 1162

1. तर्पणं (न), 2. प्रीणनं (न), 3. अवनं (न)

1. தர்பணம் (ந-அ) திருப்தி செய்து வைத்தல்
2. ப்ரீணம் (ந-அ) ,,
3. அவநம் (ந-அ) ,,

पर्याप्तिः स्यात् परित्राणं हस्तधारणमित्यपि ।

1. पर्याप्तिः (स्त्री), 2. परित्राणं (न), 3. हस्तधारणं (न)

1. பர்யாப்தி (பெ-இ) தேவையான அளவு உதவி செய்தல்
2. பரித்ராணம் (ந-அ) ,, - காப்பாற்றுதல்
3. ஹஸ்ததாரணம் (ந-அ) தேவையானதைக் கொடுப்பது

सेवनं सीवनं स्यूतिः ........................

1. सेवनं (न), 2. सीवनं (न), 3. स्यूतिः (स्त्री)

1. ஸேவநம் (ந-அ) தையற்கடை
2. ஸீவநம் (ந-அ) ,,
3. ஸ்யூதி: (ந-அ) ,,

**........................विदरः स्फुटनं भिदा ॥ 1163**

1. विदरः (पुं), 2. स्फुटनं (न)

*1. விதர: (பு-அ) பிளத்தல்*
*2. ஸ்புடனம் (ந-அ) ,,*

**आक्रोशनमभीषङ्गः ................**

1. आक्रोशनं (न), अभीषङ्गः (पुं)

*1. ஆக்ரோசநம் (ந-அ) திட்டுதல்*
*2. அபீஷங்க: (ந-அ) ,,*

**........................संवेदो वेदना न ना ।**

1. संवेदः (पुं), 2. वेदना (स्त्री)

*1. ஸம்வேத: (பு-அ) இன்ப - துன்ப அனுபவங்கள்*
*2. வேதநா (பெ-ஆ) ,,*

**संमूर्च्छनमभिव्याप्तिः .................**

1. संमूर्च्छनं (न), 2. अभिव्याप्तिः (स्त्री)

*1. ஸம்மூர்ச்சநம் (ந-அ) ஆழ்ந்த ஈடுபாடு*
*2. அபிவ்யாப்தி: (பெ-இ) ,,*

**........................याच्ञा भिक्षार्थनार्दना ॥ 1164**

1. याच्ञा (स्त्री), 2. भिक्षा (स्त्री), 3. अर्थना (स्त्री)

*1. யாச்ஞா (பெ-ஆ) இரத்தல் - பிக்ஷையாசித்தல்*
*2. பிக்ஷா (பெ-ஆ) ,,*
*3. அர்த்தநா (பெ-ஆ) ,,*

**वर्धनं छेदनेऽथ .................**

1. वर्धनं (न), 2. छेदनं (न)

***1. வர்தநம் (ந-அ)*** வெட்டுதல்
***2. சேதநம் (ந-அ)*** ,,

**....................द्धे आनन्दनसभाजने ।**

**आप्रच्छन ................**

1. आनन्दनं (न), 2. सभाजनं (न), 3. आप्रच्छनं (न)

***1. ஆநந்தம் (ந-அ)*** மகிழ்வூட்டுவது
***2. ஸபாஜநம் (ந-அ)*** ,,
***3. ஆப்ரச்சநம் (ந-அ)*** ,,

**....................अथाम्नायः संप्रदायः.........**

1. आम्नायः (पुं), 2. संप्रदायः (पुं)

***1. ஆம்நாய: (பு-அ)*** ஆசார்யர் சொல்லை ஏற்றுச் செல்லுதல்
***2. ஸம்ப்ரதாய: (ந-அ)*** பெரியோர் செய்து காட்டிய நற்பண்பு

**...................................क्षये क्षिया ॥ 1165**

1. क्षयः (पुं), 2. क्षिया (स्त्री)

***1. க்ஷய: (பு-அ)*** சிறிது சிறிதாக அறிவது
***2. க்ஷியா (பெ-ஆ)*** ,,

**ग्रहे ग्राहो ...........**

1. ग्रहः (पुं), 2. ग्राहः (पुं)

1. க்ரஹ: (பு-அ) பிடுங்கிக்கொள்ளுதல்
2. க்ராஹ: (பு-அ) ,,

................ वशः कान्तौ ..............

1. वशः (पुं), 2. कान्तिः (स्त्री)

1. வச: (பு-அ) கட்டுப்படுதல்; ஈர்ப்பது
2. காந்தி: (பு-இ) ,,

.................................रक्षणस्त्राणे ......

1. रक्षणः (पुं), 2. त्राणः (पुं)

1. ரக்ஷண: (பு-அ) காத்தல்
2. த்ராண: (பு-அ) ,,

.........................................रणः क्वणे ।

1. रणः (पुं), 2. क्वणः (पुं)

1. ரண: (பு-அ) வீணையின் மீட்டும் ஒலி
2. க்வண: (பு-அ) ,,

व्यधो वेधे ...............

1. व्यधः (पुं), 2. वेधः (पुं)

1. வ்யத: (பு-அ) துளைப்பது
2. வேத: (பு-அ) ,,

...................पचा पाके..........

1. पचा (स्त्री), 2. पाकः (पुं)

1. பசா (பெ-ஆ) சமைத்தல்
2. பாக: (பு-அ) ,,

**........................हवो हूतौ ........**

1. हवः (पुं), 2. हूतिः (स्त्री)

***1. ஹவ: (பு-அ)*** கூப்பிடுதல்
***2. ஹூதி: (பெ-இ)*** ,,

**.....................................वरो वृतौ ॥ 1166**

1. वरः (पुं), 2. वृतिः (स्त्री)

***1. வர: (பு-அ)*** வரித்தல்-ஏற்றல் (திருமணத்தில் மணமகன் மணமகளை ஏற்றல் போல்)
***2. வ்ருதி: (பெ-இ)*** வேண்டுதல்

**ओषः प्लोषे .......................**

1. ओषः (पुं), 2. प्लोषः (पुं)

***1. ஓஷ: (பு-அ)*** கொளுத்துதல், காய்தல்
***2. ப்லோஷ: (பு-அ)*** ,, - ப்ரோஷ: என்றும் பாடம்

**...................नयो नाये ...............**

1. नयः (पुं), 2. नायः (पुं)

***1. நய: (பு-அ)*** நீதி மற்றும் அடைதல்
***2. நாய: (பு-அ)*** ,,

**...............................ज्यानिर्जीर्णौ .......**

1. ज्यानिः (स्त्री), 2. जीर्णः (स्त्री)

***1. ஜ்யாநி: (பெ-இ)*** காலத்தினால் தன்மையிழந்தது
***2. ஜீர்ண: (பு-அ)*** ,,

...................................भ्रमो भ्रमौ।

1. भ्रमः (पुं), 2. भ्रमिः (स्त्री)

*1. ப்ரம: (பு-அ) தவறான கருத்து, தவறாகப் புரிந்து கொள்ளல்*
*2. ப்ரமி: (பெ-இ) ,,*

स्फातिर्वृद्धौ ..........................

1. स्फातिः (स्त्री), 2. वृद्धिः (स्त्री)

*1. ஸ்பாதி: (பெ-இ) விரிவடைதல்*
*2. வ்ருத்தி: (பெ-ஆ) ,,*

.......................प्रथा ख्यातौ ...........

1. प्रथा (स्त्री), 2. ख्यातिः (स्त्री)

*1. ப்ராதா (பெ-ஆ) புகழ்*
*2. க்யாதி: (பெ-இ) ,,*

............................स्पृष्टिः पृक्तौ ............

1. स्पृष्टिः (स्त्री), 2. पृक्तिः (स्त्री)

*1. ஸ்ப்ருஷ்டி: (பெ-இ) தொடுதல் - पृष्टिः என்றும் பாடம்*
*2. ப்ருக்தி: (பெ-இ) ,,*

.......................स्नवः स्रवे ॥ 1167

1. स्नवः (पुं), 2. स्रवः (पुं)

*1. ஸ்நவ: (பு-அ) ஒழுக்கு*
*2. ஸ்ரவ: (பு-அ) ,,*

एधां समृद्धौ ...................

1. एधा (स्त्री), 2. समृद्धिः (स्त्री)

**1. ஏதா (பெ-ஆ) பெருகுதல்**
**2. ஸம்ருத்தி: (பெ-இ) பெருகுதல்**

......................स्फरणं स्फुरणे..........

1. स्फरणं (न), 2. स्फुरणं (न)

**1. ஸ்பரணம் (ந-அ) அதிர்ச்சி**

**2. ஸ்புரணம் (பு-அ) ,,**

.................................प्रमितिः प्रमा ।

1. प्रमितिः (स्त्री), 2. प्रमा (स्त्री)

**1. ப்ரமிதி: (பெ-இ) உண்மையான அறிவு**
**2. ப்ரமா (பெ-ஆ) ,,**

प्रसूतिः प्रसवे ................

1. प्रसूतिः (स्त्री), 2. प्रसवः (पुं)

**1. ப்ரஸூதி: (பெ-இ) பிரஸவித்தல் - மகப்பேறு**
**2. ப்ரஸவ: (பு-அ) ,,**

..................श्च्योते प्राघारः .........

1. श्च्योतः (पुं), प्राघारः (पुं)

**1. ச்யோத: (பு-அ) நழுவதல் - ஊற்றம்**
**2. ப்ராகார: (பு-அ) ,,**

........................क्लमथः क्लमे ॥ 1168

1. क्लमथः (पुं), 2. क्लमः (पुं)

*1. க்லமத: (பு-அ) வாந்தியெடுத்தல்*
*2. க்லம: (பு-அ) ,,*

**उत्कर्षोऽतिशये ..............**

1. उत्कर्षः (पुं), 2. अतिशयः (पुं)

*1. உத்கர்ஷ: (பு-அ) உயர்வு*
*2. அதிசய: (பு-அ) ,,*

**.......................सन्धि श्लेषे..........**

1. सन्धिः (पुं), 2. श्लेषः (पुं)

*1. ஸந்தி: (பு-இ) இணைதல்*
*2. ச்லேஷ: (பு-அ) ,,*

**........................विषय आश्रये ।**

1. विषयः (पुं), 2. आश्रयः (पुं)

*1. விஷய: (பு-அ) அறிவுக்குறியது*
*2. ஆச்ரய: (பு-அ) அடைக்கலம்*

**क्षिपायां क्षेपणं ..................**

1. क्षिपा (न), 2. क्षेपणं (न)

*1. க்ஷிபா (ந-ஆ) எறிதல்*
*2. க்ஷேபணம் (ந-ஆ) ,,*

**.......................गीर्णिर्गिरौ ............**

1. गीर्णिः (स्त्री), 2. गिरिः (स्त्री)

1. கீர்ணி: (பெ-இ) விழுங்குதல்
2. கிரி: (பெ-இ) ,,

.............................गुरणमुद्यमे ॥ 1169

1. गुरणं (न), 2. उद्यमः (पुं)

1. குரணம் (பு-அ) முயற்சி
2. உத்யம: (பு-அ) ,,

विमर्दनं परिमले ................

1. विमर्दनं (न). 2. परिमलः (पुं)

1. விமர்தநம் (ந-அ) தேய்க்கப்பட்ட நறுமணம்
2. பரிமல: (பு-அ) ,,

.............................अभ्युपपत्तिरनुग्रहः।

1. अभ्युपपत्तिः (स्त्री), 2. अनुग्रहः (पुं)

1. அப்யுபபத்தி: (பெ-இ) ஏற்றுக்கொள்வது
2. அநுக்ரஹ: (பு-அ) அருள் புரிவது

निग्रहस्तु निरोधः स्यात् .............

1. निग्रहः (पुं)

1. நிக்ரஹ: (பு-அ) தடுப்பது

..........................अभियोगस्त्वभिग्रहः ॥ 1171

1. अभियोगः (पुं), 2. अभिग्रः (पुं)

1. அபியோக: (பு-அ) முற்றுகை
2. அபிக்ர: (பு-அ) ,,

**मुष्टिबन्धस्तु संग्राहो .................**

1. मुष्टिबन्धः (पुं), 2. संग्राहः (पुं)

***1. முஷ்டிபந்த: (பு-அ)*** *குத்துவிடுவதற்காக கையை விரல் களால் மூடிக்கொள்வது*
***2. ஸங்க்ராஹ: (ந-அ)*** *,, (மல்யுத்தத்திற்கு)*

**..............................डिम्बे डमरविप्लवौ ।**

1. डिम्बः (पुं), 2. डमरः (पुं), 3. विप्लवः (पुं)

***1. டிம்ப: (பு-அ)*** *கலகம்*
***2. டமர: (பு-அ)*** *,,*
***3. விப்லவ: (பு-அ)*** *,,*

**बन्धनं प्रसितिश्चारः ...............**

1. बन्दनं (न), 2. प्रसितिः (स्त्री), 3. चारः (पुं)

***1. பந்தனம் (ந-அ)*** *கைது*
***2. ப்ரஸிதி: (பெ-இ)*** *,,*
***3. சார: (பு-அ)*** *,, - சிறைப்படல்*

**......................स्पर्शः स्प्रष्टोपतप्तरि ॥** **1172**

1. स्पर्शः (पुं), 2. स्प्रष्टा (पुं), 3. उपतप्ता (पुं)

***1. ஸ்பர்ச: (பு-அ)*** *எரிச்சலை உருவாக்கும் நோய்கள்*
***2. ஸ்ப்ரஷ்டா (பு-ர்ரு)*** *,, கூட்டத்தில் இடித்தல்*
***3. உபதப்தா (பு-ர்ரு)*** *,, -*

**निकाशे विप्रकारः स्यात् ..................**

1. निकारः (पुं), 2. विप्रकारः (पुं)

1. நிகார: (பு-அ) அவமதித்தல்
2. விப்ரகார: (பு-அ) ,, -

....................आकारस्त्विङ्ग इङ्गितम् ।

1. आकारः (पुं), 2. इङ्गः (पुं), 3. इङ्गितम् (न)

1. ஆகார: (பு-அ) பிறர் உள்ளக்கிடக்கையை கணிப்பது
2. இங்க: (பு-அ) ,,
3. இங்கிதம் (ந-அ) ,, -

परिणामो विकारो ........................

1. परिणामः (पुं)

1. பரிணாம: (பு-அ) வினைப்பயன் - விளைவு

.......................द्वे समे विकृतिविक्रिये ॥ 1173

1. विकृतिः (स्त्री), 2. विक्रिया (स्त्री)

1. விக்ருதி: (பெ-இ) ஒரு பொருளில் விரும்பத்தகாத
2. விக்ரியா (பெ-ஆ) மாற்றம்

अपहारस्त्वपचयः .....................

1. अपहारः (पुं), 2. अपचयः (पुं)

1. அபஹார: (பு-அ) திருட்டுப்போனது
2. அபசய: (பு-அ) ,,

.......................समाहारः समुचयः ।

1. समाहारः (पुं), 2. समुचयः (पुं)

1. ஸமாஹார: (பு-அ) பொருள் ஈட்டுவது, சேர்ப்பது
2. ஸமுசய: (பு-அ) ,,

**प्रत्याहार उपादानं .............**

1. प्रत्याहारः (पुं), 2. उपादानं (न)

*1. ப்ரத்யாஹார: (பு-அ) புலன்களை மட்டுப்படுத்தல்*
*2. உபாதாநம் (ந-அ) புலன்களை உள்ளிழுத்தல்*

**..............................विहारस्तु परिक्रमः ।। 1174**

1. विहारः (पुं), 2. परिक्रमः (पुं)

*1. விஹார: (பு-அ) சுற்றுலா*
*2. பரிக்ரம: (ந-அ) ,,*

**अभिहारोऽभिग्रहणं ................**

1. अभिहारः (पुं), 2. अभिग्रहणं (न)

*1. அபிஹார: (பு-அ) சூழ்ந்துகொள்ளுதல்*
*2. அபிக்ரஹணம் (ந-அ) ,,*

**..........................निर्हारोऽभ्यवकर्षणम् ।**

1. निर्हारः (पुं), 2. अभ्यवकर्षणम् (न)

*1. நிர்ஹார: (பு-அ) உபயோகமற்றதைக் கழித்தல்*
*2. அப்யவகர்ஷணம் (ந-அ) ,,*

**अनुहारोऽनुकारः स्यात् ............**

1. अनुहारः (पुं), 2. अनुकारः (पुं)

*1. அனுஹார: (பு-அ) பிறர் போல நடப்பது*
*2. அநுகார: (ந-அ) ,*

**अर्थस्यापगमे व्ययः ।। 1175**

1. व्ययः (पुं)

**1. வ்யய:** (பு-அ) பொருட்செலவு (தனம், தானியம் முதலியன)

**प्रवाहस्तु प्रवृत्तिः स्यात् ..............**

1. प्रवाहः (पुं), 2. प्रवृत्तिः (स्त्री)

**1. ப்ரவாஹ:** (பு-அ) முனைவது
**2. ப்ரவ்ருத்தி:** (ந-இ) ,,

**......................प्रवहो गमनं बहिः ।**

1. प्रवहः (पुं)

**1. ப்ரவஹ:** (பு-அ) வீட்டிலிருந்து வெளியே புறப்படுதல் - வெளியேறுதல்

**वियामो वियमो यामो यमः संयामसंयमौ ॥ 1176**

1. वियामः (पुं), 2. वियमः (न), 3. यामः (पुं), 4. यमः (पुं), 5. संयामः (पुं), 6. संयमः (पुं)

**1. வியாம:** (பு-அ) ஓய்வெடுத்தல்
**2. வியம:** (பு-அ) ,,
**3. யாம:** (பு-அ) விடுதல்
**4. யம:** (பு-அ) ,, - புலன் அடக்கம்
**5. ஸம்யாம:** (பு-அ) முற்றும் புலன்களை அடக்குவது
**6. ஸம்யம:** (பு-அ) ,,

இந்த ஆறு சொற்களையும் पर्यायपद மாகக் கொள்வதுண்டு. ஒரே பொருள் உள்ள சில சொற்களில் ஒன்றுக்கொன்று பொருள் வேறுபாடு வரலாம். அப்படி பொருள் மாறுபாடு அற்றதே पर्यायः.

**हिंसाकर्माभिचारः स्यात् ................**

1. अभिचारः (पुं)

*1. அபிசார: (பு-அ) ஏவல் செய்வினைகள் (பிறரைத் துன்பம் செய்வதற்கோ, கொல்வதற்கோ செய்யப்படும் ஹோமங்கள் முதலிய கர்மாக்கள்)*

**........................जागर्या जागरा द्वयोः ।**

1. जागर्या (स्त्री), 2. जागरा (स्त्री/पुं)

*1. ஜாகர்யா (பெ-ஆ) விழித்திருத்தல்*
*2. ஜாகரா (பெ-ஆ) ,,*
*ஜாகர: (பு-அ) ,,*

**विघ्नोऽन्तरायः प्रत्यूहः स्यात् .........**

1. विघ्नः (पुं), 2. अन्तरायः (पुं), 3. प्रत्यूहः (पुं)

*1. விக்ந: (பு-அ) இடையூறு*
*2. அந்தராய: (பு-அ) ,,*
*3. ப்ரத்யூஹ: (பு-அ) ,,*

**.............................उपघ्नोऽन्तिकाश्रये ॥ 1177**

1. उपघ्नः (पुं)

*உபக்ந: (பு-அ) அருகில் உள்ள அணையத்தக்க பொருள்*

**निर्वेश उपभोगः स्यात् ...............**

1. निर्वेशः (पुं), 2. उपभोगः (पुं)

*1. நிர்வேச: (பு-அ) அனுபவித்தல்*
*2. உபபோக: (பு-அ) ,,*

**.........................परिसर्पः परिक्रिया ।**

1. परिसर्पः (पुं), 2. परिक्रिया (स्त्री)

***1. பரிஸர்ப: (பு-அ)*** சுற்றுலா
***2. பரிக்ரியா (பெ-ஆ)*** ,,

**विधुरं तु प्रविश्लेषो ..................**

1. विधुरं (न), 2. प्रविश्लेषः (पुं), 3. विधुरं (पुं/स्त्री/न)

***1. விதுரம் (ந-அ)*** மீட்கமுடியாத இழப்பு -தூரதேசங்களில் விட்டு பிரிந்திருத்தல்
***2. ப்ரவிச்லேஷ: (பு-அ)*** ,,
***3. விதுர: (பு-அ)*** ,,
***விதுரா (பெ-ஆ)*** ,,
***விதுரம் (ந-அ))*** விட்டுவிட்டுப்போனவன்.
மனைவியை இழந்தவன் என்பது வழக்கு

**.....................अभिप्रायश्छन्द आशयः ॥ 1178**

1. अभिप्रायः (पुं), 2. छन्दः (पुं), 3. आशयः (पुं)

***1. அபிப்ராய: (பு-அ)*** தன்னுடைய தனிப்பட்ட கருத்து
***2. சந்த: (ந-அ)*** ,,
***3. ஆசய: (ந-அ)*** ,,

**संक्षेपणं समसनं ...............**

1. संक्षेपणं (न), 2. समसनं (न)

***1. ஸம்க்ஷேபணம் (பு-அ)*** சுருக்கம்
***2. ஸமஸநம் (ந-அ)*** ,,

**.....................पर्यवस्था विरोधनम् ।**

1. पर्यवस्था (स्त्री), 2. विरोधनम् (न)

*1. பர்யவஸ்தா (பெ-ஆ) எதிர்ப்பு*
*2. விரோதநம் (ந-அ) ,,*

**परिसर्या परीसारः ............**

1. परिसर्या (स्त्री), 2. परीसारः (पुं)

*1. பரிஸர்யா (பெ-ஆ) எங்கும் திரிதல் - சுற்றுதல்*
*2. பரீஸாரः (ந-அ) ,,*

**....................स्यादास्या त्वसना स्थितिः ॥ 1179**

1. आस्या (स्त्री), 2. आसना (स्त्री), 3. स्थितिः (स्त्री)

*1. ஆஸ்யா (பெ-ஆ) இருக்கை- இருப்பு*
*2. ஆஸநா (பெ-ஆ) ,,*
*3. ஸ்திதி: (பெ-இ) ,,*

**विस्तारो विग्रहो व्यासः ...............**

1. विस्तारः (पुं), 2. विग्रहः (पुं), 3. व्यासः (पुं)

*1. விஸ்தாரः (பு-அ)விரிவு (பொதுவானது)*
*2. விக்ரஹः (பு-அ) ,,*
*3. வ்யாஸः (பு-அ) ,,*

**.......................स तु शब्दस्य विस्तरः ।**

1. विस्तरः (पुं)

*1. விஸ்தரः (பு-அ) சொல்லால் விரிவான விளக்கம்*

**स्यान्मर्दनं संहननं ................**

1. मर्दनं (न), 2. संहननं (न)

1. மர்தநம் (ந-அ) உடலைப் பிடித்துவிட்டு வலுவூட்டுதல் संवाहनं என்றும் பாடமுண்டு

2. ஸம்ஹநநம் (ந-அ) ,,

........................विनाशः स्याददर्शनम् ॥ 1180

1. विनाशः (पुं), 2. अदर्शनं (पुं)

1. விநாச: (பு-அ) காணப்படாமை
2. அதர்சநம் (ந-அ) ,,

संस्तवः स्यात् परिचयः ..................

1. संस्तवः (पुं), 2. परिचयः (पुं)

1. ஸம்ஸ்தவ: (பு-அ) புதிதைப் புரிந்துகொள்ளுதல்
2. பரிசய: (ந-அ) ,,

........................प्रसरस्तु विसर्पणम् ।

1. प्रसरः (पुं), 2. विसर्पणं (न)

1. ப்ரஸர: (பு-அ) நீர்வீசி அடிப்பது
2. விஸர்பணம் (ந-அ) ,,

निवाकस्तु प्रयामः स्यात् ..................

1. निवाकः (पुं), 2. प्रयामः (पुं)

1. நிவாக: (பு-அ) கூட்டியோ - குறைவோ இல்லாமல் உள்ளது உள்ளபடி கூறல்
2. ப்ரயாம: (ந-அ) ,, नीवाकः என்றும் பாடம்

........................संनिधिः संनिकर्षणम् ।

1. सन्निधिः (पुं), 2. सन्निकर्षणं (न)

*1. ஸந்நிதி: (பு-இ) அருகே இருத்தல்*
*2.ஸந்நிகர்ஷணம் (ந-அ) ,,*

**लवोऽभिलावो लवने ................**

1. लवः (पुं), 2. अभिलावः (पुं), 3. लवनं (न)

*1, லவ: (பு-அ) பயிர் அறுவடை*
*2. அபிலாவ: (பு-அ) ,,*
*3. லவநம் (ந-அ) ,,*

**..............................निष्पावः पवने पवः ।**

1. निष्पावः (पुं), 2. पवनं (न), 3. पवः (पुं)

*1. நிஷ்பாவ: (பு-அ) தானியங்களை தூற்றுதல்*
*2. பவநம் (ந-அ) ,,*
*3. பவ: (பு-அ) ,,*

**प्रस्तावः स्यादवसरः .................**

1. प्रस्तावः (पुं), 2. अवसरः (पुं)

*1. ப்ரஸ்தாவ: (பு-அ) சொல்லக் கிடைத்த தருணம்*
*2. அவஸர: (பு-அ) ,,*

**..........................त्रसरः सूत्रवेष्टनम् ॥ 1182**

1. त्रसरः (पुं), 2. सूत्रवेष्टनं (न)

*1. த்ரஸர: (பு-அ) ராட்டினம் (நெசவாளி நூல் சுற்றும்*
*2.ஸூத்ரவேஷ்டநம்(ந-அ) ,, ராட்டினம்)*

**प्रजनः स्यादुपसरः ..........................**

1. प्रजनः (पुं), 2. उपसरः (पुं)

***1. ப்ரஜந: (பு-அ)*** பசு - எருமைகளை பொலிக்கச்
***2. உபஸர: (பு-அ)*** ,, செய்தல்-கர்பமடையச் செய்தல் (கர்பமாகும் காலம் என்பது லிங்கபட்டீயம்)

**........................प्रसरप्रणयौ समौ ।**

1. प्रसरः (पुं), 2. प्रणयः (पुं)

***1. ப்ரஸர:*** (பு-அ) அன்புடன் வற்புறுத்தல் (விநயம் என்பது லிங்கப்பட்டீயம்)
***2. ப்ரணய:*** (ந-அ) ,,

**धीशक्तिर्निष्क्रमो..............**

1. निष्क्रमः (पुं)

***1. நிஷ்க்ரம:*** (பு-அ) புத்தியின் சீற்றம் (இது எட்டுவித நிலைகளில் ஏற்படும்)

**......................अस्त्री तु संक्रमो दुर्गसंचरः ॥ 1183**

1. संक्रमः (पुं/न), 2. दुर्गसंचरः (पुं)

***1. ஸங்க்ரம:*** (பு-அ) கோட்டைக்காவல்
***2. ஸங்க்ரமம்*** (ந-அ) ,,
***3. துர்கஸம்சர:*** (பு-அ) ,,

**प्रत्युत्क्रमः प्रयोगार्थः ................**

1. प्रत्युत्क्रमः (पुं)

***1. ப்ரத்யுத்க்ரம:*** (பு-அ) முற்றுகை

........................प्रक्रमः स्यादुपक्रमः ।

1. प्रक्रमः (पुं), 2. उपक्रमः (पुं)

*1. ப்ரக்ரம: (பு-அ)* தொடக்கம்
*2. உபக்ரம: (பு-அ)* ,,

स्यादभ्यादानमुद्धात आरंभः .................

1. अभ्यादानं (न), उद्धातः (पुं), 3. आरंभः (पुं)

*1. அப்யாதாநம் (ந-அ)* போரில் முந்துதல்
*2. உத்காத: (பு-அ)* ,,
*3. ஆரம்ப: (பு-அ)* ,,

................................संभ्रमस्त्वरा ॥ 1184

1. संभ्रमः (पुं), 2. त्वरा (स्त्री)

*1. ஸம்ப்ரம: (பு-அ)* படபடப்பு
*2. த்வரா (பெ-ஆ)* துடிப்பு

प्रतिबन्धः प्रतिष्टम्भो ....................

1. प्रतिबन्धः (पुं), 2. प्रतिष्ठंभः (पुं)

*1. ப்ரதிபந்த: (பு-அ)* எதிரியைத்தடுத்தல்
*2. ப்ரதிஷ்டம்ப: (ந-அ)* ,,

........................अवनायस्तु निपातनम् ।

1. अवनायः (पुं), 2. निपातनं (न)

*1. அவநாய: (பு-அ)* குனியச்செய்தல்
*2. நிபாதநம் (ந-அ)* ,,

**उपलम्भस्त्वनुभवः ..................**

1. उपलंभः (पुं), 2. अनुभवः (पुं)

***1. உபலம்ப: (பு-அ) அறிவியல் திறத்தால் கண்டுபிடித்தல்***
***2. அனுபவ: (பு-அ) ,,***

**........................ समालम्भो विलेपनम् ॥ 1185**

1. समालंभः (पुं), 2. विलेपनं (न)

***1. ஸமாலம்ப: (பு-அ) மேல்பூச்சு***
***2. விலேபநம் (ந-அ) ,,***

**विप्रलम्भो विप्रयोगो ...............**

1. विप्रलंभः (पुं), 2. विप्रयोगः (पुं)

***1. விப்ரலம்ப: (பு-அ) கணவன்-மனைவி பிரிவினால் ஏற்பட்ட துயரம்***
***2. விப்ரயோக: (ந-அ) ,,***

**........................विलम्भस्त्वतिसर्जनम् ।**

1. विलंभः (पुं), 2. अतिसर्जनं (न)

***1. விலம்ப: (பு-அ) லஞ்சம் கொடுத்தல்***
***2. அதிஸர்ஜநம் (ந-அ) ,,***

**विश्रावस्तु प्रविख्यातिः ...............**

1. विश्रावः (पुं), 2. प्रविख्यातिः (स्त्री)

***1. விச்ராவ: (பு-அ) பெரும்புகழ்***
***2. ப்ரவிக்யாதி: (பெ-இ) ,,***

**........................अवेक्षा प्रतिजागरः ॥ 1186**

1. अवेक्षा (स्त्री), 2. प्रतिजागरः (पुं)

*1. அவேக்ஷா (பெ-ஆ) எச்சரிக்கை*
*2. ப்ரதிஜாகர: (ந-அ) ,,*

**निपाठनिपठौ पाठे ...................**

1. निपाठः (पुं), 2. निपठः (पुं), 3. पाठः (पुं)

*1. நிபாட: (பு-அ) படித்தல்*
*2. நிபட: (ந-அ) ,,*
*3. பாட: (பு-அ) ,,*

**......................तेमस्तेमौ समुन्दने ।**

1. तेमः (पुं), 2. स्तेमः (पुं), 3. समुन्दनं (न)

*1. தேம: (பு-அ) அறிப்பினால் சொறிந்துகொள்ளுதல்*
*2. ஸ்தேம: (பு-அ) ,,*
*3. ஸமுந்தநம் (ந-அ) ,,*

**आदीनवास्रवौ क्लेशे ...................**

1.आदीनवः (पुं), 2. आस्रवः (पुं), 3. क्लेशः (पुं)

*1. ஆதீநவ: (பு-அ) மனக்கவலையால் ஏற்படும் குழப்பம்*
*2. ஆஸ்ரவ: (பு-அ) ,,*
*3. க்லேச: (ந-அ) ,,*

**........................मेलके सङ्गसंगमौ ॥ 1187**

1. मेलकः (पुं), 2. सङ्गः (पुं), 3. संगमः (पुं)

*1. மேலக: (பு-அ) கூடல், சேர்க்கை*
*2. ஸங்க: (பு-அ) ,,*
*3. ஸங்கம: (பு-அ) ,,*

अन्वीक्षणं विचयनं मार्गणं मृगणा मृगः ।

1. अन्वीक्षणं (न), 2. विचयनं (न), 3. मार्गणं (न), 4. मृगणा (स्त्री), 5. मृगः (पुं)

1. அன்விக்ஷணம் (ந-அ) ஆராய்ச்சி
2. விசயநம் (ந-அ) ,,
3. மார்கணம் (ந-அ) ,,
4. ம்ருகணா (பெ-ஆ) ,, ஆதாரம் தேடுதல்
5. ம்ருக: (ந-அ) ,,

परिरम्भः परिष्वङ्गः संश्लेष उपगूहनम् ॥ 1188

1. परिरंभः (पुं), 2. परिष्वङ्गः (पुं), 3. संश्लेषः (पुं), 4. उपगूहनम् (न)

1. பரிரம்ப: (பு-அ) அணைத்தல் - ஆலிங்கனம்
2. பரிஷ்வங்க: (ந-அ) ,,
3. ஸம்ஸ்லேஷ: (பு-அ) ,,
2. உபகூஹனம் (ந-அ) ,,

निर्वर्णनं तु निध्यानं दर्शनालोकणेक्षणम् ।

1. निर्वर्णनं (न), 2. निध्यानं (न), 3. दर्शनं (न), 4. आलोकनं (न)

1. நிர்வர்ணநம் (ந-அ) கருத்தே இல்லாமல் கூர்ந்து பார்ப்பது - மன வெறுமை
2. நித்யாநம் (ந-அ) ,,
3. தர்சநம் (ந-அ) ,,
4. ஆலோகநம் (ந-அ) ,,

प्रत्याख्यानं निरसनं प्रत्यादेशो निराकृतिः ॥ 1189

1. प्रत्याख्यानं (न), 2. निरसनं (न), 3. प्रत्यादेशः (पुं), 4. निराकृतिः (स्त्री)

1. ப்ரத்யாக்யாநம் (ந-அ) மறுத்துக் கூறுதல்
2. நிரஸநம் (ந-அ) ,,
3. ப்ரத்யாதேச: (பு-அ) பிறர் கருத்தை ஏற்காதிருத்தல்
4. நிராக்ருதி: (பெ-அ) ,,

उपशायो विशायश्च पर्यायशयनार्थकौ ।

1. उपशायः (पुं), 2. विशायः (पुं),

1. உபசாய: (பு-அ) தூக்கமின்றி புரண்டு புரண்டு
2. விசாய: (பு-அ) படுத்தல்

अर्तनं च ऋतीया च हृणीया च घृणार्थकाः ॥ 1190

1. अर्तनं (न), 2. ऋतीया (स्त्री), 3. हृणीया (स्त्री)

1. அர்தநம் (ந-அ) ரோஷம் கொள்ளுதல்
2. ர்ருதீயா (பெ-ஆ) ,,
3. ஹ்ருணீயா (பெ-ஆ) ,,

स्याद् व्यत्यासो विपर्यासो व्यत्ययस्तु विपर्ययः ।

1. व्यत्यासः (पुं), 2. विपर्यासः (पुं), 3. [redacted]यः (पुं),
4. विपर्ययः(पुं)

1. வ்யத்யாஸ: (பு-அ) மாற்றுக் கருத்து
2. விபர்யாஸ: (பு-அ) ,,
3. வ்யத்யய: (ந-அ) ,,
4. விபர்யய: (ந-அ) ,,

पर्यायोऽतिक्रमस्तस्मिन्नतिपात उपात्ययः ॥ 1191

1. पर्यायः (पुं), 2. अतिक्रमः (पुं), 3. अतिपातः (पुं), 4. उपात्ययः (पुं)

1. பர்யாய: (பு-அ) முறை தவறிய மாற்றுச் செய்கை
2. அதிக்ரம: (பு-அ) ,, முறைமீறுதல்
3. அதிபாத: (பு-அ) தாறுமாறாகச்செய்தல்
4. உபாத்யய: (பு-அ) ,,

**प्रेषणं यत् समाहूय तत्र स्यात् प्रतिशासनम् ।**

1. प्रतिशासनं (न)

1. ப்ரதிசாஸநம் (ந-அ) வேலையாளை அழைத்துஅவனிடம் இப்படிச்செய் என்று கட்டளையிடல்

**स संस्तावः ऋतुषु या स्तुतिभूमिर्द्विजन्मनाम् ॥ 1192**

1. संस्तावः (पुं)

1. ஸம்ஸ்தாவ: (பு-அ) யாகங்களில் ஸ்தோத்திரம் செய்யுமிடம்

**निधाय तक्ष्यते यत्र काष्ठे काष्ठं स उद्घनः ।**

1. उद्घनः (पुं)

1. உத்கன: (பு-அ) ஆதாரக்கட்டை. மரம் செதுக்கும்போது ஆதாரமாக ஒரு மரக்கட்டையை வைத்துச் செதுக்குவார்கள். இந்த ஆதாரக்கட்டையின் பெயர்) தச்சுவேலைக்குரிய பட்டறை

**स्तम्बघ्नस्तु स्तम्बघनः स्तम्बो येन निहन्यते ॥ 1193**

1. स्तम्बघ्नः (पुं), 2. स्तम्बघनः (पुं)

1. ஸ்தம்பக்ந: (பு-அ) உழவாரம்-புல் செதுக்கும் கருவி
2. ஸ்தம்பகந: (ந-அ) ,,

**आविधो विध्यते येन .................**

1. आविधः (पुं)

***1. ஆவித: (பு-அ) ரத்தினங்களை துளைபோடும் வஜ்ர ஊசி***

**............................तत्र विष्वक्समे निघः ।**

1. निघः (पुं)

***1. நிக: (பு-அ) அகலம் -நீளம் சமமாக உள்ள (சதுரமான) மேடை. பத்தலின் பட்டரைக்கல்***

**उत्कारश्च निकारश्च द्वौ धान्योत्क्षेपणार्थकौ ॥ 1194**

1. उत्कारः (पुं), 2. निकारः (पुं)

***1. உத்கார: (பு-அ) தான்யம் புடைக்கும் முறம்-(தானியத்தைத் தூற்றுதல் என்பது லிங்க பட்டீயம்)***
***2. நிகார: (பு-அ) ,,***

**निगारोद्गार विक्षावोद्ग्राहा निगरणादिषु ।**

1. निगारः (पुं), 2. उद्गारः (पुं), 3. विक्षावः (पुं), 4. उद्ग्राहः (पुं)

***1. நிகார: (பு-அ) விழுங்குதல் - ஏப்பம் விடுதல்***
***2. உத்கார: (பு-அ) ,,***
***3. விக்ஷாவ: (பு-அ) ,,***
***4. உத்க்ராஹ: (பு-அ) ,,***

**आरत्यवरतिविरतय उपरामे .............**

1. आरतिः (पुं), 2. अवरतिः (पुं), 3. विरतिः (स्त्री), 4. उपरामः(पुं)

***1. ஆரதி: (பு-இ) வேலை முடித்து ஓய்வு***
***2. அவரதி: (பு-இ) ,,***
***3. விரதி: (பு-இ) ,,***
***4. உபராம: (பு-அ) ,,***

....................अथास्त्रियां तु निष्ठेवः ॥ 1195

निष्ठ्यूतिर्निष्ठेवनं निष्ठीवनमित्यभिन्नानि ।

1. निष्ठेवः (पुं/स्त्री) 2. निष्ठ्यूतिः (स्त्री), 3. निष्ठेवनः (न), 4. निष्ठीवनं (न)

*1. நிஷ்டேவ: (பு/பெ-அ) காறி உமிழ்தல்*
*2. நிஷ்ட்யூதி: (பெ-இ) ,,*
*3. நிஷ்டேவநம் (ந-அ) ,,*
*4. நிஷ்டீவநம் (ந-அ) ,,*

जवने जूतिः ....................

1. जवनः (पुं), 2. जूतिः (स्त्री)

*1. ஜவந: (பு-அ) விரைவாக ஓடுதல்*
*2. ஜூதி: (பெ-இ) ,,*

..........सातिस्त्ववसाने स्यात्..........

1. सातिः (स्त्री), 2. अवसानं (न)

*1. ஸாதி: (பு-அ) செயல் முடிவு*
*2. அவஸாநம் (ந-அ) ,,*

.................................... अथ ज्वरे जूर्तिः ।

1. ज्वरः (पुं), 2. जूर्तिः ( स्त्री)

*1. ஜ்வர: (பு-அ) ஜ்வரம்*
*2. ஜூர்த்தி (பெ-இ) ,,*

उदजस्तु पशुप्रेरणं ....................

1. उदजः (पुं)

*1. உதஜ: (பு-அ) பசுக்களை மேய்த்தல்*

**.......................अकरिणिरित्यादयः शापे ।**

1. अकरणिः (पुं)

*1. அகரணி: (பு-இ) சாபமிடுதல். இது முதலாக* अजननिः । अवग्राहः । निग्राहः *முதலிய சொற்களையும் சொல்லலாம்*

**गोत्रान्तेभ्यस्तस्य वृन्दमित्यौपगवकादिकम् ॥ 1197**

1. औपगवं (न)

*1. ஔபகவம் (ந-அ) ஔபக வம்சக் கூட்டம் ஆத்ரேயகம்- ஆத்ரேயவம்சக் கூட்டம் சரை வத்ஸகம்- ஸ்ரீவத்ஸகோத்ரகூட்டம்*
*கௌசிகம்-கௌசிக வம்சக் கூட்டம்*
*இவ்வாறு கோத்திரத்தினரின் கூட்டம்*
गोत्र प्रत्ययान्त शब्द*ங்கள் வரும்.*

**आपूपिकं शाष्कुलिकमेवमाद्यमचेतसाम् ।**

1.आपूपिकं (न), 2. शाष्कुलिकं (न)

*1. ஆபூபிகம் (ந-அ) முறுக்கு, சீடை போன்ற திண்பண்டங்களில் குவியல்*
*2. சாஷ்குலிகம் (ந-அ) ,,*

**माणवानां तु माणव्यं..................**

1. माणव्यं (न)

*1. மாணவ்யம் (ந-அ)மாணவர் கூட்டம்*

**......................सहायानां सहायता ॥ 1198**

1. सहायता (स्त्री)

***1. ஸஹாயதா** (பெ-ஆ) உதவி செய்பவர்களின் கூட்டம்*

**हल्या हलानां ....................**

1. हल्या (स्त्री)

***1. ஹல்யா** (பெ-ஆ) கலப்பைகளின் தொகுப்பு*

**................ ब्राह्मण्यबाडव्ये तु द्विजन्मनाम् ।**

1. ब्राह्मण्यं (न), 2. बाडव्यं (न)

***1. ப்ராம்ஹண்யம்** (ந-அ) அந்தணர்களின் ஸமூகம்/கூட்டம்*
***2. பாடவ்யம்** (ந-அ)*

**द्वे पर्शुकानां पृष्ठानां पार्श्वं पृष्ठ्यमिति क्रमात् ॥ 1199**

1. पार्श्वं (न), 2. पृष्ठं (न)

***1. பார்ச்வம்** (ந-அ) வரிசையாயுள்ள பக்கத்தெலும்புகளின் தொகுப்பு*
***2. ப்ருஷ்டம்** (ந-அ) முதுகெலும்புகளின் தொகுதி*

**खलानां खलिनी खल्याप्यथ .............**

1. खलिनी (स्त्री), 2. खल्या (स्त्री)

***1. கலிநீ** (பெ-ஈ) துஷ்டர்களின் கூட்டம்*
***2. கல்யா** (பெ-ஆ) ,,*

**.........................मानुष्यकं नृणाम् ।**

1. मानुष्यकं (न)

*1. மானுஷ்யகம் (ந-அ)* மனிதர்களின் ஸமூகம்

**ग्रामता जनता धूम्या पाश्या गल्या पृथक् पृथक् ॥**

1. ग्रामता (स्त्री), 2. जनता (स्त्री), 3. धूम्या (स्त्री), 4. पाश्या (स्त्री), 5. गल्या (स्त्री)

*1. க்ராமதா (பெ-ஆ)* கிராமங்களின் கூட்டம்
*2. ஜனதா (பெ-ஆ)* ஜனங்களின் கூட்டம்
*3. தூம்யா (பெ-ஆ)* புகைகளின் கூட்டம்
*4. பாச்யா (பெ-ஆ)* கயிறுகளின் குவியல்
*5. கல்யா (பெ-ஆ)* வைக்கோல்போர்

இவ்வைந்தும் தனித்தனியான பெயர்கள்

**अपि साहस्रकारीषचार्मणाथर्वणादिकम् ॥ 1200**

1. साहस्रं (न), 2. कारीषं (न), चार्मणं (न), 4. आथर्वणं (न)

*1. ஸாஹஸ்ரம் (ந-அ)* ஆயிரங்களின் ஸமூஹம்
*2. காரீஷம் (ந-அ)* விரட்டிகளின் குவியல்
*3. சார்மணம் (ந-அ)* தோல்களின் (செருப்புகளின்) தொகுப்பு
*4. ஆதர்வணம் (ந-அ)* அதர்வண வேதத்தைக்கற்றவர்களின் ஸமூஹம்

ஆதி என்ற சொல்லினால் இவை போன்ற சொற்களைக் கொள்ள வேண்டும் என்று குறிப்பிடப்படுகிறது.

*ஸங்கீர்ணவர்கம் முற்றும்*



## ।। ३. नानार्थवर्गः ।।

### 3. ஒருசொல் பலபொருள் வர்கம்

இந்த அமரகோசம் தொடக்கம் முதல் முன் வர்க்கம் வரை கூறப்பட்ட சொற்கள் "ஒரு பொருளில் பல சொற்களின்" தொகுப்பு. அவை தொகுதி தொகுதியாக கூறப்பட்டன. இனிவரும் சொற்க்ள் "ஒரு சொல் பல பொருள்" என்ற வகையில் தொகுக்கப்பட்டவைகள். இதிலும் சில சொற்கள் முன் கூறப்பட்ட வர்க்கங்களில் வந்தவையும், வராத சொற்களுமாக வரவிருக்கின்றன. இந்தத் தொகுதியில் क ख ग घ - $க_1$ $க_2$ $க_3$ $க_4$ என்ற அட்சர வரிசையில் முடிவு பெறுகின்ற சொற்கள் வரிசையாக வருகின்றன. ஆனாலும் சில சொற்கள் ஒரு பொருளிலேயே அதிகமாக உபயோகப்படுகின்றன. மாற்றுப் பொருள், சிலேடை முதலிய அலங்காரங் களுக்காக இச் சொற்கள் பயன்படுகின்றன.

नानार्थाः कोऽपि कान्तादिवर्गेष्वेवात्र कीर्तिताः ।
भूरिप्रोयगा ये येषु पर्यायेष्वपि तेषु ते ।। 1201

**இனி क($க_1$)என்ற எழுத்தில் முடியும்சொற்கள் :**

**आकाशे त्रिदिवे नाको .............**

1. नाकः (पुं)

***1. நாக: (பு-அ) 1. ஆகாயம், 2. சுவர்கம்***

**...................लोकस्तु भुवने जने ।**

1. लोकः (पुं)

***1. நாக: (பு-அ) 1. உலகம் (சுவர்கம் முதலிய உலகம்)***
***2. மக்கள், 3. ஜன ஸமூகம்***

पद्ये यशसि च श्लोकः ...............

1. श्लोकः (पुं)

*1. ச்லோக: (பு-அ) 1. ச்லோகம், 2. புகழ்*

.........................शरे खड्गे च सायकः ॥ 1202

1. सायकः (पुं)

*1. ஸாயக: (பு-அ) 1. அம்பு, 2. கத்தி*

जम्बुकौ क्रोष्टुवरुणौ ........................

1. जम्बुकः (पुं)

*1. ஜம்புக: (பு-அ) 1. நரி, 2. வருணன்*

........................ पृथुकौ चिपिटार्भकौ ।

1. पृथुकः (पुं)

*1. ப்ருதுக: (பு-அ) 1. சிறு பிள்ளை*

*2. ப்ருதுகம் (ந-அ) 2. அவல்*

आलोको दर्शनोद्योतौ .........................

1. आलोकः (पुं)

*1. ஆலோக: (பு-அ) 1. ஆராய்ச்சி, 2. ஒளி*

.........................भेरीपटह मानकौ ॥ 1203

1. मानकः (पुं)

*1. மாநக: (பு-அ) 1. பேரீ, 2. தம்பட்டம்*

**उत्सङ्गचिह्नयोरङ्कः ..................**

1. अङ्कः (पुं)

***1. அங்க: (பு-அ) 1. மடி (தொடை), 2. அடையாளம்***

**..................कलङ्कोऽङ्कापवादयोः ।**

1. कलङ्कः (पुं)

***1. கலங்க: (பு-அ) 1. அடையாளம், 2. அவதூறு***

**तक्षको नागवर्धकयोः ....................**

1. तक्षकः (पुं)

***1. தக்ஷக: (பு-அ) 1. தக்ஷகன் என்ற நாகப்பாம்பு***
***2. தச்சன் (மர வேலை செய்பவர்)***

**........................अर्कः स्फटिकसूर्ययोः ॥ 1204**

1. अर्कः (पुं)

***1. அர்க: (பு-அ) 1. ஸ்படிகம், 2. சூரியன்***

**मारुते वेधसि ब्रध्ने पुंसि कः कं शिरोऽम्बु नोः ।**

1. कः (पुं), कं (नः)

***1. க: (பு-அ) 1. வாயுதேவன் (காற்று), 2. ப்ரம்ஹா,***
***3. சூரியன்***

***2. கம் (ந-அ) 4. சிரசு (தலை), 6. ஜலம்***

**स्यात् पुलाकस्तुच्छधान्ये संक्षेपे भक्तसिक्थके ॥ 1205**

1. पुलाकः (पुं)

*1. புலாக: (பு-அ) 1. கருக்காய், 2. சுருக்கம்,*
*3. சோற்றுப்பருக்கை*

**उलूके करिणः पुच्छमूलोपान्ते च पेचकः ।**

1. पेचकः (पुं)

*1. பேசக: (பு-அ) 1. கோட்டான்,*
*2. யானையின் வாய் (அடிபாகம்)*

**कमण्डलौ च करकः .....**

1. करकः (पुं)

*1. கரக: (பு-அ) 1. கமண்டலம், 2. ஆலங்கட்டி*
*3. வெடிகுண்டு, 4. கொக்கறை என்ற பக்ஷி,*
*5. மாதுளம்பழம் "ச" காரத்தில்*
*இவற்றையும் குறிக்கும்*

**........................सुगते च विनायकः ॥ 1206**

1. विनायकः (पुं)

*1. விநாயக: (பு-அ) 1. புத்தர், 2. கணபதி, 3. கருடன்*
*4. குரு*
*"ச" காரத்தால் இவர்களையும் குறிக்கும்*

**किष्कुर्हस्ते वितस्तौ च ...................**

1. किष्कुः (पुं)

*1. கிஷ்கு: (பு-அ) 1. முழம், 2. சாண், 3. முன்கை*
*4. சிறுமையாளன் ஆகியவற்றை*
*"ச"காரத்தால் குறிக்கும்*

..............................शूलकीटे च वृश्चिकः ।

1. वृश्चिकः (पुं)

1. வ்ருச்சிக: (பு-அ) 1. தேள், 2. சில்வண்டு,
3. வ்ருச்சிக ராசி

प्रतिकूले प्रतीकः प्रतीकस्त्रिष्वेकदेशे तु पुंस्ययम् ॥ 1207

1. प्रतीकः (पुं/स्त्री/न)

1. ப்ரதீக: (பு/பெ/ந-அ) 1. எதிர்மறையால் முழுச் சொல்லின் குறுகிய சுட்டுச்சொல் இது மூன்று லிங்கங்களிலும் வரும். ஏதேனும் ஒரு பகுதியை குறிக்கும்போது புல்லிங்க மாகவும் சொல்லப்படும்.

स्याद् भूतिकं तु भूनिम्बे कत्तृणे भूस्तृणेऽपि च ।

1. भूतिकं (न)

1. பூதிகம் (ந-அ) 1. நிலவேம்பு, 2. அருகம்புல்,
3. காகா வட்டப்புல்

ज्योस्त्निकायां च घोषे च कोशातक्य ..............

1. कोशातकी (स्त्री)

1. கோசாதகீ (பெ-ஈ)1. புடலஞ்செடி, ஆவாரஞ்செடி
(நாயுரிவிச்செடி என்பது லிங்கபட்டீயம்)

.......................................अथ कट्फले ॥ 1208

सिते च खदिरे सोमवल्कः स्यात् .............

1. सोमवल्कः (पुं)

1. ஸோமவல்க: (பு-அ) 1. தேக்குமரம்.
2. வெள்வேலைமரம்(வெண்கருங்காலி)
சந்திரனை போன்று வெண்மை நிறம்
உள்ள பூசணி என்பது லிங்கபட்டீயம்

.................................. अथ सिह्लके।

तिलकल्के च पिण्याके ................

1. पिण्याकः (पुं)

1. பிண்யாக: (பு-அ) 1. சாம்பிராணி கமழும் புகை
2. எள்ளு புண்ணாக்கு

.......................... बाह्लीकं रामठेऽपि च ॥ 1209

1. बाह्लीकं (पुं)

1. பாஹ்லீகம் (பு-அ) 1. பெருங்காயம். (பாஹ்லீகம்
என்ற நாட்டில் பிறந்தது) 2. குதிரை,
3. குங்குமப்பூ

महेन्द्रगुग्गुलूलूक व्यालग्राहिषु कौशिकः ।

1. कौशिकः (पुं)

1. கௌசிக: (பு-அ) 1. இந்திரன், 2. குங்கலியமரம்
3. கோட்டான், 4. பாம்பாட்டி

रुक्तापशङ्कास्वातङ्कः ....................

1. आतङ्कः (पुं)

1. ஆதங்க: (பு-அ) 1. ரோகத்தினால் ஏற்பட்டவேதனை;
அவதூறினால் ஏற்பட்ட வேதனை
2. தாபஜ்வரம், 3. பயம்

..................स्वल्पेऽपि क्षुल्लकस्त्रिषु ॥ 1210

1. क्षुल्लकः (पुं/स्त्री/न)

*1. க்ஷுல்லக: (பு/பெ/ந-அ) 1. மிகச் சிறியது*

*2. இகழத்தக்கது என்பது 'அபி' என்ற சொல்லினால்*

*3. தரித்திரன்*

जैवातृकः शशाङ्केऽपि ..................

1. जैवातृकः (पुं)

*1. ஜைவாத்ருக: (பு-அ) 1. சந்திரன், 2. வயதானதால் உதாசீனம் செய்யப்பட்டவன்*

........................खुरेऽप्यश्वस्य वर्तकः ।

1. वर्तकः (पुं)

*1. வர்த்தக: (பு-அ) 1. குதிரையின் குளம்பு*

*2. விச்சுளி என்ற காடை*

व्याघ्रेऽपि पुण्डरीको ना ....................

1. पुण्डरीकः (पुं/न)

*1. புண்டரீக: (பு-அ) 1. புலி, 2. திசையானை*

*2. புண்டரீகம் (ந-அ) 3. தாமரை, 4. சிலேடையில் புலியைக் குறிக்கும்.*

..........................यवान्यामपि दीपकः ॥ 1211

1. दीपकः (पुं)

*1. தீபக: (பு-அ) 1. ஓமம், 2. சீரகம்*

सालावृकाः कपिक्रोष्टुश्वानः ............

1. सालावृकः (पुं)

*1. ஸாலாவ்ருக: (பு-அ) 1. குரங்கு, 2. நரி, 3. நாய்*

**..........................स्वर्णेऽपि गैरिकम् ।**

1. गैरिकम् : (न)

*1. கைரிகம் (ந-அ) 1. தங்கம், 2. பொதுவாக மண்ணில் விளையும் தாதுப்பொருளையும், சில பிரயோகங்களில் தங்கத்தையும் குறிக்கும்*

**पीडार्थेऽपि व्यलीकं स्यात्..............**

1. व्यलीकः (पुं)

*1. வ்யலீகம் (ந-அ) 1. துன்பம்,2. பிரியமில்லாமை, 3. வெட்கம், 4. அவமானம்*

**.......................अलीकं त्वप्रियेऽनृते ॥ 1212**

1. आलीकं (न)

*1. ஆலீகம் (ந-அ) 1. பொய், 2. வேண்டாதது*

**शीलान्वयावनूके द्वे ................**

1. अनूकं (न)

*1. ஆநூகம் (ந-அ) 1. இயல்பு (இயற்கையான குணம்) 2. வம்சம்*

**.....................शल्के शकलवल्कले ।**

1. शल्कं (न)

1. சல்கம் (ந-அ) 1. நுணிக்கிழிசல்
2. மரவுறி, 2. செய்கூலி என்று பெயர்

साष्ठे शते सुवर्णानां हेम्न्युरो भूषणे पले ॥ 1213
दीनारेऽपि च निष्कोऽस्त्री .........

1. निष्कः (पुं/न)

1. நிஷ்க:(பு/ந-அ)1.பொன் நாணயத்தின் எண்களில் 108
2. தங்கம், 3. தங்க நகைகள்
4. பலம் (எடை), 5. முகலாயர் காலத்து நாணயம் என்பர் சிலர்

.......................कल्कोऽस्त्री शमलैनसोः ।
दम्भे अपि .....................

1. कल्कः (पुं/न)

1. கல்க: (பு/ந-அ) 1. புண்ணுக்குப் போடப்படும் களிம்பு (OINTMENT)
2. பாபம், 3. கர்வம்

...........अथ पिनाकोऽस्त्री शूलशंकर धन्वनोः ॥ 1214

1. पिनाकः (पुं/न)

1. பிநாக:(பு/ந-அ)1. சூலாயுதம், 2. சிவனுடைய வில்

धेनुका तु करेण्वां च ................

1. धेनुना (स्त्री)

1. தேநுகா (பெ-ஆ) 1. பெண் யானை,(பொதுவாக நான்கு கால் கன்று. குறிப்பாக பெண்யானைக் குட்டி)
2. புதிதாய் கன்றீன்ற பசு

.....................मेघजाले च कालिका

1. कालिका (स्त्री)

1. காலிகா (பெ-ஆ) 1. மேகக் கூட்டம், 2. [illegible]
3. யோகிநீ, 4. தங்கத்தில் கலப்படம்
5. மரியாதை, 6. கருப்பு

कारिका यातनावृत्योः .....................

1. कारिका (स्त्री)

1. காரிகா (பெ-ஆ) 1. தீவிர வேதனை, 2. செயல்
3. மூலநூலின் சிற்றுரை

..................... कर्णिका कर्णभूषणे ॥ 12[illegible]

करिहस्ताङ्गुलौ पद्मबीजकोश्याम् .............

1. कर्णिका (स्त्री)

1. கர்ணிகா (பெ-ஆ) 1. காதணி, 2. யானை துதிக்கை நுனி
3. தாமரைப் பூவின் நடுவிலுள்ள காய்

.....................................त्रिषूत्तरे

மேலே வருகின்ற 'க' காரத்தில் முடியும் சொற்கள் மூன்று லிங்கங்களிலும் வரும்

बृन्दारकौ रूपिमुख्यौ ....................

1. बृन्दारकः (पुं/स्त्री/न)

1. ப்ருந்தாரக: (பு/ந-அ) 1. அழகர்களில் சிறப்பானவன்
ப்ருந்தாரகா: (பெ-ஆ) ,, ,,
ப்ருந்தாரகம் (ந-அ) ,, ,,
2. ஒவ்வொரு பொருளிலும் அழகானது

......................वेके मुख्यान्यकेवलाः ॥ 1216

1. एकः (पुं/स्त्री/न)

*1. ஏக:(பு/பெ/ந-அ) 1. முக்யஸ்தர்,*
*2. தனிப்பட்டவன், 3. இணையற்றவன்*

**स्याद् दाम्भिकः कौक्कुटिको यश्चाद्दूरेरितेक्षणः ।**

1. कौक्कुटिकः (पुं/स्त्री/न)

*1. கௌக்குடிக: (பு-அ) 1. டம்பாசாரி*
*2. கௌக்குடிகா (பெ-ஆ) 2. குடில புத்தியுள்ளவன் (கோணல் புத்தியுள்ளவன்)*
*3. கௌக்குடிலம் (ந-அ) வரப்போவதை கனிப்பவன்*

**ललाटिकः प्रभोर्भावदर्शी कार्याक्षमश्च यः ॥ 1217**

1. ललाटिकः (पुं/स्त्री/न)

*1. லலாடிக:(பு-அ) 1. எஜமானனின் குறிப்புணர்பவன்*
*2. லலாடிகா(பெ-ஆ) ஆனால் செயலற்றவன். இதனால்*
*3. லலாடிகம் (ந-அ) ஒதுக்கப்பட்டு தலையில் அடித்துக்கொள்பவன்*

**भूभृन्नितम्बवलयचक्रेषु कटकोऽस्त्रियाम् ।**

1. कटकः (पुं/न)

*1. கடக: (பு-அ) 1. மலையின் தாழ்வான சுற்றுப்புறம்-*
*கடகம் (ந-அ) மலைகளின் வட்டமான நடுப்பகுதி*

**रोमाञ्चे क्षुद्रशत्रौ च तरोरङ्गे च कण्टकः ॥ 1218**

1. कण्टकः (पुं)

*1. கண்டக: (பு-அ) 1. முள், 2. மயிற்கூச்சம்,*
*3. அற்பனான எதிரி, 4. மரத்தின் முகடு*

**"க" என்ற எழுத்தில் முடியும் சொற்கள் இவை**



## अथ खान्तवर्गः

### க₂ வில் முடியும் சொற்கள்

मयूखस्त्विट्करज्वाला .......................

1. मयूखः (पुं)

*1. மயூக: (பு-அ) 1. நீண்ட ஒளி, 2. கிரணம், 3. ஜ்வாலை நுனி*

..............................स्वलिबाणौ शिलीमुखौ ।

1. शिलीमुखः (पुं)

*1. சிலீமுக: (பு-அ) 1. வண்டு, 2. அம்பு*

शङ्खो निधौ ललाटस्थ्नि कम्बौ न स्त्री .......

1. शङ्खः (पुं/न)

*1. சங்க: (பு-அ)1. சங்கநிதி, 2. நெற்றி எலும்பு, 3.சங்கு*
*,, (ந-அ)*

.................................. इन्द्रियेऽपि खम् ॥ 1219

1. खम् (न)

*1. கம் (ந-அ) 1. இந்திரியம், 2. ஆகாசம்*

घृणिज्वाले अपि शिखे .................

1. शिखा (स्त्री)

*1. சிகா (பெ-ஆ) 1. நெருப்புக் கொழுந்து, 2. கிரணம்*

"க₂" என்ற எழுத்தில் முடியும் சொற்கள் இவை



## अथ गान्तवर्गः

### க வில் முடியும் சொற்கள்

........................शैलवृक्षौ नगावगौ ।

1. नगः (पुं), 2. अगः (पुं)

*1. நக: (பு-அ) 1. பர்வதம், 2. மரம்*
*அக: (பு-அ) ,, ,,*

**आशुगौ वायुविशिखौ ...................**

1. आशुगः (पुं)

*1. ஆசுக: (பு-அ) 1. வாயு (காற்று), 2. அம்பு*

**....................... शरार्कविहगाः खगाः ॥ 1220**

1. खगः (पुं)

***1. கக: (பு-அ) 1. அம்பு, 2. சூரியன், 3. பறவை***

**पतङ्गौ पक्षिसूर्यौ च ...................**

1. पतङ्गः (पुं)

***1. பதங்க:(பு-அ) 1. பறவை, 2. சூரியன், 3.தத்துக்கிளி, 4. பாச்சை, 5. விட்டில்பூச்சி***

**.......................पूगः क्रमुकवृन्दयोः ।**

1. पूगः (पुं)

***1. பூக: (பு-அ) 1. பாக்கு, 2. ஸமூகம்***

पशवोऽपि मृगा ................

1. मृगः (पुं)

1. ம்ருக: (பு-அ)1. பசுக்கள். பொதுவாக மற்ற விலங்குகளையும் குறிக்கும். 2. மிருகசீரிஷ நட்சத்திரம், 3. மான், 4. சிறந்த ஒருவகை யானை

........................वेगः प्रवाहजवयोरपि ॥ 1221

1. वेगः (पुं)

1. வேக: (பு-அ) 1. ஆற்றுப்பெருக்கு 2. விரைவு

परागः कौसुमे रेणौ स्नानीयादौ रजस्यपि ।

1. परागः (पुं)

1. பராக: (பு-அ) 1. மலர்களிலுள்ள மகரந்தப்பொடி. 2. குளியல் சூரணம், 3. தூசி - புழுதி

गजेऽपि नागमातङ्गौ ..............

1. जगः (पुं), 2. मातङ्गः (पुं)

1. நக: (பு-அ) 1. யானை, 2. மலை

2. மாதங்க: (பு-அ) 1. யானை, 2. சண்டாளன்

........................ वपाङ्गस्तिलकेऽपि च ॥ 1222

1. अपाङ्गः (पुं)

1. அபாங்க: (பு-அ) 1. கடைக்கண்(மூலைப்பார்வை) 2. திலகம் என்றும் சொல்லாம்

सर्गः स्वभावनिर्मोक्षनिश्चयाध्यायसृष्टिषु ।

1. सर्गः (पुं)

1. ஸர்க: (பு-அ) 1. இயல்பு, 2. விடுவித்தல், 3. இறுதி,
4. அத்தியாயம், 5. படைப்பு

**योगः संनहनोपायध्यान संगतियुक्तिषु ॥ 1223**

1. योग : (पुं)

1. யோக: (பு-அ) 1. உடற்கட்டு, 2. த்யானத்திற்குரிய புலனடக்கம், மனவடக்கம்
3. ஒருமித்தகருத்து, 4. சேர்த்தல், 5. யுக்தி

**भोगः सुखे स्त्र्यादिभृतावहेश्च फणकाययोः ।**

1. भोगः (पुं)

1. போக: (பு-அ) 1. சுகத்தைக் கொடுக்கும் பண்டம் சுக அநுபவம், 2. பெண்களுடன் கூடியிருத்தல் (கலவி),
3. பாம்பின் உடல்
4. பாம்பு படம் எடுத்தல்

**चातके हरिणे पुंसि सारङ्गः शबले त्रिषु ॥ 1224**

1. सारङ्गः (पुं/स्त्री/न)

1. ஸாரங்க: (பு-அ) 1. சாதகப் பறவை, 2. மான்
ஸாரங்கம் (பு/பெ/ந-அ) பலவண்ணம் பொருந்தியவை

**कपौ च प्लवगः .................**

1. प्लवगः (पुं)

1. ப்லவக: (பு-அ) 1. குரங்கு, 2. தாவுகின்ற தவளை முதலியன

**.................शापे त्वभिषङ्गः पराभवे ।**

1. अभिषङ्गः (पुं)

*1. அபிஷங்க: (பு-அ) 1. சாபம் (சாபமென்பது துன்பம் கொடுத்தவனுக்கு நீங்கு நேரிடாத அபவாதம் என்பது லிங்கபட்டீயம்)*
*2. தோல்வி*

**यानाद्यङ्गे युगः पुंसि युगं युग्मे कृतादिषु ॥ 1225**

1. युगः (पुं)

*1. யுக: (பு-அ) 1. நுகத்தடி (ஏர்க்கால்)*
*யுகம் (ந-அ) 2. ஜோடி*
*யுக: (பு-அ) 3. க்ருத்யுகம் முதலிய காலக் கணக்கு*

**स्वर्गेषु पशुवाग्वज्रादिग्नेत्रघृणि भूजले ।**
**लक्ष्यदृष्ट्या स्त्रियां पुंसि गौः ..........**

1. गौः (पुं)

*1. கௌ: (பு-ஔ) 1. காளை, விலங்குகள், சொல்வண்மை, வஜ்ராயுதம், திசை, கிரணம், பூமி, நீர் இவற்றில் ஸாதாரண பொருளில் அல்ல. பெருமைக்குரிய பொருளில் வந்தால் பெண்பாலாகக் கொள்ளவேண்டும்*

**..............................लिङ्गं चिह्नशेफसोः ॥ 1226**

1. लिङ्गं (न)

*1. லிங்கம் (ந-அ) 1. அடையாளம், 2. ஆண்குறி*

**शृङ्गं प्राधान्यसान्वोश्च ............**

1. शृङ्गः (पुं)

*1. ச்ருங்க: (ந-அ) 1. தலைமைத்தன்மை, 2. மலைச்சிகரம், 3. கொம்பு, 4.ஜீரகம் - என்ற வாசனைத் திரவ்யம்*

